# மூக்குக்கண்ணாடி.

வெள்ளெழுத்துவந்தகண்களுக்கும், தூரத்ருஷ்டி-சமீபத்ருஷ்டி இழந்த கண்களுக்கும், நீர்சுதாங்கா கண்களுக்கும், வயதுக்கும் பார்வைக்கும் ஏற்றவை இந்த மூக்குக் கண்ணாடிகள்.



வேண்டியவர்கள் தாம் எத்தனைநாளாகக் கண்ணாடி போட்டுவருவதோ அதையும், புதிதாய்ப் போடுவதாகில் அதையும் விவரமாகத் தெரிவித்தால், தக்க உரையுடன் மூக்குக்கண்ணாடி அனுப்பப்படும்.

ஒன்றுக்குக் கிரயம் அணா 8.

இதுவன்றியும் இன்னும் அநேகவிதமான விலையுயர்ந்த மூக்குக்கண்ணாடிகளுங்கிடைக்கும்.

## எ. சி. பெயின் கியூர்.

இத்தைலத்தினால்தீரும்வியாதிகள்— பாரிசவாய்வு, கீல்வாய்வு, முடக்குவாய்வு, மூட்டுவீக்கம், கால்பிடிப்பு, கைகால் குடைச்சல், சுளுக்கு, புறங்கழுத்திசிவு, மார்நோய், ஒற்றைத்தலைவலி, இடுப்புவலி, பல்நோய், சுகஜன்னி, ஜலதோஷம், தேள்விஷம் முதலியவையே. இது மேற்பூச்சுத் தைலம்-அறியவும்.

புட்டி 1-க்கு அணா 6.

## எ. சி. ரிங்வோரம் கியூர்.

"படைத்தேமல்" என்னும் தொற்றுவியாதியானது சரீரத்தில் இடுப்பு, தொடையிடுக்கு, அக்குள் முதலிய விடங்களில் முதல் சிறு அளவாகத் தோன்றி, தேகமாதியந்தம் படர்ந்து, சகிக்கமுடியாத தினவையும், ஓயாச் சொறிகையும் தந்து வெகு தொந்திரவுபடுத்திவருவது யாவர்க்குந் தெரிந்ததே. அதை ஒழிப்பதற்கு இதுவே கைகண்ட ஔஷதமாகும்.

புட்டி 1-க்கு அணா-4.

ஷை படைகளுக்கு சோப்பு பில்லை 1-க்கு [illegible]-4.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# திருவாலவாய்த்திருநீற்றுப்பதிகம்.



பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

மந்திரமாவதுநீறுவானவர்மேலதுநீறு
சுந்தரமாவதுநீறுதுதிக்கப்படுவதுநீறு
தந்திரமாவதுநீறுசமயத்திலுள்ளதுநீறு
செந்துவர்வாயுமைபங்கன்றிருவாலவாயான்றிருநீறே.

வேதத்திலுள்ளதுநீறுவெந்துயர்தீர்ப்பதுநீறு
போதந்தருவதுநீறுபுன்மைதவிர்ப்பதுநீறு
வோதத்தகுவதுநீறுவுண்மையிலுள்ளதுநீறு
சீதப்புனல்வயல்சூழ்ந்ததிருவாலவாயான்றிருநீறே. ௨

முத்திதருவதுநீறுமுனிவரணிவதுநீறு
சத்தியமாவதுநீறுதக்கோர்புகழ்வதுநீறு
பத்திதருவதுநீறுபரவவினியதுநீறு
சித்திதருவதுநீறுதிருவாலவாயான்றிருநீறே. ௩

காணவினியதுநீறுகவினைத்தருவதுநீறு
பேணியணிபவர்க்கெல்லாம்பெருமைகொடுப்பதுநீறு
மாணந்தகைவதுநீறுமதியைத்தருவதுநீறு
சேணந்தருவதுநீறுதிருவாலவாயான்றிருநீறே. ௪

பூசவினியதுநீறுபுண்ணியமாவதுநீறு
பேசவினியதுநீறுபெருந்தவத்தோர்களுக்கெல்லா
மாசைகெடுப்பதுநீறுவந்தமதாவதுநீறு
தேசம்புகழ்வதுநீறுதிருவாலவாயான்றிருநீறே. ௫

அருத்தமதாவதுநீறவலமறுப்பதுநீறு
வருத்தந்தணிப்பதுநீறுவானமளிப்பதுநீறு
பொருத்தமதாவதுநீறுபுண்ணியர்பூசும்வெண்ணீறு
திருத்தகுமாளிகைசூழ்ந்ததிருவாலவாயான்றிருநீறே.

எயிலதுவட்டதுநீறிருமைக்குமுள்ளதுநீறு
பயிலப்படுவதுநீறுபாக்கியமாவதுநீறு
துயிலைத்தடுப்பதுநீறுசுத்தமதாவதுநீறு
வயிலைப்பொலிதருசூலத்தாலவாயான்றிருநீறே. ௭

இராவணன்மேலதுநீறு வெண்ணத்தகுவதுநீறு
பராவணமாவதுநீறுபாவமறுப்பதுநீறு
தராவணமாவதுநீறுதத்துவமாவதுநீறு
வராவணங்குந்திருமேனியாலவாயான்றிருநீறே. ௮

மாலொடயனறியாதவண்ணமுமுள்ளதுநீறு
மேலுறைதேவர்கடங்கண்மெய்யதுவெண்பொடிநீறு
வேலவுடம்பிடர்தீர்க்குமின்பந்தருவதுநீறு
வாலமதுண்டமிடற்றெம்மாலவாயான்றிருநீறே. ௯

குண்டிகைக்கையர்களோடுசாக்கியர்கூட்டமுங்கூடக்
கண்டிகைப்பிப்பதுநீறுகருதவினியதுநீறு
வெண்டிசைப்பட்டபொருளாரேத்துந்தகையதுநீறு
வண்டத்தவர்பணிந்தேத்துமாலவாயான்றிருநீறே. ௧௦

ஆற்றலடல்விடையேறுமாலவாயான்றிருநீற்றைப்
போற்றிப்புகலிநிலாவும்பூசுரன்ஞானசம்பந்தன்
றேற்றித்தென்னனுடலுற்றதீப்பிணியாயினதீரச்
சாற்றியபாடல்கள்பத்தும்வல்லவர்நல்லவர்தாமே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

திருநாவுக்கரசுசுவாமிகள்
அருளிச்செய்த

## திருவங்கமாலை.

பண் - சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

தலையேநீவணங்காய் — தலை
மாலைதலைக்கணிந்து
தலையாலேபலிதேருந்தலைவனைத்
தலையேநீவணங்காய். ௧

கண்காள்காண்மின்களோ — கட
னஞ்சுண்டகண்டன்றன்னை
யெண்டோள்வீசிநின்றாடும்பிரான்றன்னை
கண்காள்காண்மின்களோ. ௨

செவிகாள்கேண்மின்களோ — சிவ
னெம்மிறைசெம்பவள
வெரிபொன்மேனிப்பிரான்றிறமெப்போதுஞ்
செவிகாள்கேண்மின்களோ. ௩

மூக்கேநீமுரலாய் — முது
காடுறைமுக்கணனை
வாக்கேநோக்கியமங்கைமணாளனை
மூக்கேநீமுரலாய். ௪

வாயேவாழ்த்துகண்டாய் — மத
யானையுரிபோர்த்துப்
பேய்வாழ்காட்டகத்தாடும்பிரான்றன்னை
வாயேவாழ்த்துகண்டாய். ௫

நெஞ்சேநீநினையாய் — நிமிர்
புன்சடைநின்மலனை
மஞ்சாடுமலைமங்கைமணாளனை
நெஞ்சேநீநினையாய். ௬

கைகாள்கூப்பித்தொழீர்—கடி
மாமலர்தூவிநின்று
பைவாய்ப்பாம்பரையார்த்தபரமனைக்
கைகாள்கூப்பித்தொழீர். ௭

ஆக்கையாற்பயனென்—அரன்
கோயில்வலம்வந்து
பூக்கையாலட்டிப்போற்றியென்னாதவிவ்
வாக்கையாற்பயனென். ௮

கால்களாற்பயனென்—கறைக்
கண்டனுறைகோயில்
கோலக்கோபுரகோகரணஞ்சூழாக்
கால்களாற்பயனென். ௯

உற்றாருளரோ—வுயிர்
கொண்டுபோம்பொழுது
குற்றாலத்துறைகூத்தனல்லானமக்
குற்றாருளரோ. ௧௦

இறுமாந்திருப்பன்கொலோ—ஈசன்
பல்கணத்தெண்ணப்பட்டுச்
சிறுமானேந்திதன் சேவடிக்கீழ்ச்சென்றங்
கிறுமாந்திருப்பன்கொலோ. ௧௧

தேடிக்கண்டுகொண்டேன்—திரு
மாலொடுநான்முகனுந்
தேடித்தேடொணாத்தேவனையென்னுள்ளே
தேடிக்கண்டுகொண்டேன். ௧௨

திருச்சிற்றம்பலம்.

——

சுந்தரமூர்த்தி சுவாமிகள்
அருளிச்செய்த

## திருவெண்ணெய்நல்லூர்ப்பதிகம்.

பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

பித்தாபிறைசூடிபெருமானேயருளாளா, வெத்தான்மறவாதேநினைக்கின்றேன்மனத்துன்னை, வைத்தாய்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையு, ளத்தாவுனக்காளாயினியல்லேனெனலாமே க

நாயேன்பலநாளுநினைப்பின்றிமனத்துன்னைப், பேயாய்த்திரிந்தெய்த்தேன்பெறலாகாவருள்பெற்றேன், வேயார்பெண்ணைத்தென்பால்வெண்ணெய் நல்லூரருட்டுறையு, ளாயாவுனக்காளாயினியல்லேனெனலாமே. உ

மன்னேமறவாதேநினைக்கின்றேன்மனத்துன்னைப், பொன்னேமணிதானேவயிரமேபொருதுந்தி, மின்னார்பெண்ணைத்தென்பால்வெண்ணெய் நல்லூரருட்டுறையு, ளன்னேயுனக்காளாயினியல்லேனெனலாமே. ௩

முடியேனினிப்பிறவேன்பெறின்மூவேன்பெற்றமூர்த்தி, கொடியேன்பலபொய்யேயுரைப்பேனைக்குறிக்கொண்ணீ, செடியார்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையு, ளடிகேளுனக்காளாயினியல்லேனெனலாமே. ௪

பாதம்பணிவார்கள்பெறுபண்டம்மதுபணியா, யாதன்பொருளானேனறிவில்லேனருளாளா, தாதார்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையு, ளாதீயுனக்காளாயினியல்லேனெனலாமே. ௫

தண்ணார்மதிசூடிதழல்போலுந்திருமேனி, யெண்ணார்புரமூன்றுமெரியுண்ணநகைசெய்தாய், மண்ணார்

பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையு,
ளண்ணாவுனக்காளாயினியல்லேனெனலாமே. ௬

ஊனாயுயிரானாயுடலானாயுலகானாய், வானாய்நிலனா
னாய்கடலானாய்மலையானாய், தேனார்பெண்ணைத்தென்
பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையு,ளானாயுனக்காளா
யினியல்லேனெனலாமே. ௭

ஏற்றார்புர மூன்றுமெரி யுண்ணச்சிலைதொட்டாய்,
தேற்றாதனசொல்லித்திரிவேனோசெக்கர்வானீ,ரேற்றா
ப்பெண்ணைத்தென்பால்வெண்ணெய் நல்லூரருட்டுறை
யு,ளாற்றாயுனக்காளாயினியல்லேனெனலாமே. ௮

மழுவாள்வலனேந்திமறை யோதிமங்கை பங்கா,
தொழுவாரவர்துயராயினதீர்த்தலுனதொழிலே, செழு
வார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட்டு
றையு, ளழகாவுனக்காளாயினியல்லேனெனலாமே. ௯

காரூர்புனலெய்திக்கரைகல்லித்திரைக்கையாற்,பா
ரூர்புகழெய்தித்திகழ்பன்மாமணியுந்திச், சீரூர்பெண்
ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையு, ளாரூ
ரனெம்பெருமாற்காளல்லேனெனலாமே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

---

மாணிக்கவாசகசுவாமிகள்
அருளிச்செய்த
## திருச்சாழல்.

—*—

நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா.

---

திருச்சிற்றம்பலம்.

பூசுவதும்வெண்ணீறுபூண்பதுவும்பொங்கரவம்
பேசுவதுந்திருவாயான்மறைபோலுங்காணேடீ
பூசுவதும்பேசுவதும்பூண்பதுவுங்கொண்டென்னை
யீசனவனெவ்வுயிர்க்குமியல்பானான்சாழலோ. ௧

என்னப்பனெம்பிரானெல்லார்க்குந்தானீசன்
றுன்னம்பெய்கோவணமாக்கொள்ளுமதுவென்னேடீ
மன்னுகலைதுன்னுபொருண்மறைநான்கேவான்சரடா
தன்னையேகோவணமாச்சாத்தினன்காண்சாழலோ. [த்

கோயில்சுடுகாடுகொல்புலித்தோலாடை
தாயுமிலிதந்தையிலிதான்றனியன்காணேடீ
தாயுமிலிதந்தையிலிதான்றனியனாயிடினுங்
காயுமுலகனைத்துங்கற்பொடிகாண்சாழலோ. ௩

அயனையனங்கனையந்தகனைச்சந்திரனை
மயனங்கண்பாயாவடுச்செய்தான்காணேடீ
நயனங்கண்மூன்றுடையநாயகனேதண்டித்தாற்
சயமன்றோவானவர்க்குத்தாழ்குழலாய்சாழலோ. ௪

தக்கனையுமெச்சனையுந்தலையறுத்துத்தேவர்கணந்,
தொக்கனவந்தவர்தம்மைத்தொலைத்ததுதானென்னே
டீ, தொக்கனவந்தவர்தம்மைத் தொலைத்தருளியருள்
கொடுத்தங், கெச்சனுக்குமிகைத்தலைமற்றருளினன்கா
ண்சாழலோ. ௫

அலரவனுமாலவனுமறியாமேயழலுருவாய்
நிலமுதற்கீழண்டமுறநின்றதுதானென்னேடீ
நிலமுதற்கீழண்டமுறநின்றிலனேலிருவருந்தஞ்
சலமுகத்தாலாங்காரந்தவிரார்காண்சாழலோ. ௬

மலைமகளையொருபாகம்வைத்தலுமேமற்றொருத்தி
சலமுகத்தாலவன்சடையிற்பாயுமதுவென்னேடீ [லாம்
சலமுகத்தாலவன்சடையிற்பாய்ந்திலனேற்றரணியெல்
பிலமுகத்தேபுகப்பாய்ந்துபெருக்கேடாஞ்சாழலோ. ௭

கோலாலமாகிக்குரைகடல்வாயன்றெழுந்த
வாலாலமுண்டானவன்சதுர்தானென்னேடீ
யாலாலமுண்டிலனேலன்றயன்மாலுள்ளிட்ட
மேலாயதேவரெல்லாம்வீடுவர்காண்சாழலோ. ௮

---

தென்பாலுகந்தாடுந்தில்லைச்சிற்றம்பலவன்
பெண்பாலுகந்தான்பெரும்பித்தன்காணேடீ
பெண்பாலுகந்திலனேற்பேதாயிருநிலத்தோர்
விண்பாலியோகெய்திவீடுவர்காண்சாழலோ. ௯

தானந்தமில்லான்றனையடைந்தநாயேனை
யானந்தவெள்ளத்தழுத்துவித்தான்காணேடீ
யானங்கவெள்ளத்தழுத்துவித்ததிருவடிகள்
வானுந்துதேவர்கட்கோர்வான்பொருள்காண்சாழலோ

நங்காயிதென்னதவநரம்போடெலும்பணிந்து
கங்காளந்தோண்மேலேகாதலித்தான்காணேடீ
கங்காளமாமாகேள்காலாந்தரத்திருவர்
தங்காலஞ்செய்யத்தரித்தனன்காண்சாழலோ ௧௧

கானார்புலித்தோலுடைதலையூண்காடுபதி
யானாலவனுக்கிங்காட்படுவாரரேடீ
யானாலுங்கேளாயயனுந்திருமாலும்
வானாடர்கோவும்வழிபடியர்சாழலோ ௧௨

மலையரையன்பொற்பாவைவாணுதலாள்பெண்டிருவை,
யுலகறியத்தீவேட்டானென்னுமதுவென்னேடீ, யுலகறி
யத்தீவேட்டாதொழிந்தனனேலுலகனைத்துங், கலைந
வின்றபொருள்களெல்லாங்கலங்கிடுங்காண்சாழலோ.

தேன்புக்கதண்பணைசூழ்தில்லைச்சிற்றம்பலவன்
றான்புக்குநட்டம்பயிலுமதுவென்னேடீ
தான்புக்குநட்டம்பயின்றிலனேற்றரணியெல்லா
மூன்புக்கவேற்காளிக்கூட்டாங்காண்சாழலோ. ௧௪

கடகரியும்பரிமாவுந்தேருமுகந்தேறாதே
யிடபமுகந்தேறியவாறெனக்கறியவியம்பேடீ
தடமதில்களவைமூன்றுந்தழலெரித்தவந்நாளி
லிடபமாய்த்தாங்கினான்றிருமால்காண்சாழலோ. ௧௫

நன்றாகநால்வர்க்குநான்மறையுனுட்பொருளை
யன்றாலின்கீழிருந்தங்கறமுரைத்தான்காணேடீ
யன்றாலின்கீழிருந்தங்கறமுரைத்தானாயிடினுங்
கொன்றான்காண்புரமூன்றுங்கூட்டோடேசாழலோ.

அம்பலத்தேகூத்தாடியமுதுசெய்ப்பலிதிரியு
நம்பனையுந்தேவனென்றுநண்ணுமதுவென்னேடீ
நம்பனையுமாமாகேணான்மறைகடாமறியா
வெம்பெருமானீசாவென்றேத்தினகாண்சாழலோ.

சலமுடையசலந்தரன்றனுடறடிந்தநல்லாழி
நலமுடையநாரணற்கன்றருளியவாறென்னேடீ
நலமுடையநாரணன்றனயனமிடந்தரனடிக்கீ
ழலராகவிடவாழியருளினன்காண்சாழலோ. ௧௮

அம்பரமாம்புள்ளித்தோலாலாலமாரமுத
மெம்பெருமானுண்டசதுரெனக்கறியவியம்பேடீ
யெம்பெருமானேதுடுத்தங்கேதமுதுசெய்திடினுந்
தம்பெருமைதானறியாத்தன்மையன்காண்சாழலோ.

அருந்தவருக்காலின்கீழறமுதலாநான்கனையு
மிருந்தவருக்கருளுமதுவெனக்கறியவியம்பேடீ
யருந்தவருக்கறமுதனான்கன்றருளிச்செய்திலனேற்
றிருந்தவருக்குலகியற்கைதெரியாகாண்சாழலோ. ௧௯

திருச்சிற்றம்பலம்.

நெ. 26, சௌரிமுத்து தெரு, மன்னடி போஸ்ட்டு, மதறாஸ்.

# புத்தக கேட்லாக்.

## சுந்தரமூர்த்திசுவாமிகள்
## தேவாரம்.

இப்புத்தகத்தில் அடங்கியவை.

தெய்வமொழி வரலாறு, சமயகுரவர் வரலாறு திருமுறை வரலாறு, தேவாரப்பெயருரை, தேவாரம் ஓதுதற்குறிய அதிகாரிகள், தேவாரம்பாராத்தஆன்மார்த்தமந்திரமெனல், தேவாரர் திருச்சிற்றம்பலம்பெற்றகாரணம், திருச்சிற்றம்பலப்பெயர்மாட்சி, தேவாரத்திருப்பதிவிளக்கம், தேவாரவைப்புத்தலவிளக்கம், தேவாரத்திருமுறை, பதிகச்சரித்திரம், ஸ்தலமிருக்குமிடம், அருணகிரிநாதர் திருப்புகழ், திருப்பாட்டகராதி, திருப்புகழகராதி.

இப்புத்தகம் மிகவும் உயர்ந்த பளபளப்புள்ள தளமான கடிதத்தில் சுத்தமான பெரிய எழுத்தில் ஊ-புஷ்பரதசெட்டி கம்பெனியில் பதிப்பிக்கப்பெற்றது.

☞ காலிகோகட்டடமுள்ளது. விலை ரூபா ஒன்று.
வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.

---

## கந்தர்கவசம்.

இதனுள் மந்திரயந்திர முறைகளும் ஓர் அருமையான யந்திரப்படமும் அடங்கியிருக்கின்றன. இந்நூல் பாராயணத்தால் விரும்பியசித்தியைப் பெறலாம்.
விலை பை-6.

---

## சிவஞானபோத மூலமும்
### சிவஞானமுனிவருரையும்.

இஞ்ஞான சாஸ்திரம் ஒவ்வொரு புலவரிடத்தும், ஒவ்வொரு மாணாக்கரிடத்தும், ஒவ்வொரு வித்தியா

வினோதரிடத்தும், ஒவ்வொரு கலாசாலையிடத்தும் இருக்கவேண்டியதாம்.

ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக் கடவுள் திருக்காதில் வீற்றிருக்கப்பெற்றதும், ஜனகாதி முனிவர்கட்கு மெய்ஞ்ஞான வழியைக் காட்டிக்கொடுத்ததும் இஞ்ஞான சாஸ்திரமேயாம். விலை அணா 10.

## இகபரஞானசாரத்திரட்டு முதற்பாகம்.

இஃது இகலோகசுகத்தையும், பரலோகசுகத்தையும் அடைவதற்குரிய அறிவைக் கொடுக்கத்தக்க பல செய்யுட்களைத் திரட்டித் தொகுக்கப்பட்டதொருநூலாகும். உலகத்தில் முக்கியமாகப் பலநூற்களைப் பலகாலும் படித்து வருந்தியருமையாகத் தெரிந்து கொள்ளவேண்டிய விஷயங்கள்பலவும் இவ்வொரேபுத்தகத்தில் மிகச் சொற்பகாலத்தில் அதிசுலபமாக எவ்வளவு மந்தமதியினரும் நன்றாய் அறிந்துகொள்ளுதற்கேற்றபடி இதுதிரட்டி அமைக்கப்பட்டிருக்கின்றது; ஆகையால், இஃது ஒவ்வொருவரிடமும் அத்தியாவசியமாக இருக்கவேண்டியதாகும். இது மிகச் சிறுவர்களுக்குங் கூட மிகச் சாதாரணமாய் உபயோகப்படக் கூடியதாகும். விலை அணா 8.

## ஸ்ரீநிவாசக தாராசசாங்கம்.

இது தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீநிவாசமுதலியாரால் இயற்றப்பட்ட ஓர் இனிய தமிழ்நாடகம். தாராசசாங்கம் நாடகமாக இன்னும் பலரால் செய்யப்பட்டிருக்கின்றது, ஆயினும், அவைகளெல்லாவற்றினும் இது மிகவும் கற்பனையலங்காரங்களாற்சிறந்து, சிறுபிள்ளைகளுக்கு எளிதிலுணரும்படியான மிகஎளிய நடையையுடையதாய்ப்படிக்குந்தோறுங் களிப்பைத்தந்து, யாவருடைய மனதையுங் கவரத்தக்கதாய் அமைந்திருக்கின்றது அன்றியும் இது பெண்பாலருக்கும் ஆண்பாலருக்கும் வேண்டிய பல நீதிகளையும் பாலொடுபழத்தைக்கூட்டி

யுண்பிப்பாரைப்போல் நன்ருய்ப் போதிக்கின்றதாய் இருத்தலால், இதனை யனைவரும் வாங்கிப் படிக்கவேண்டியது மிக அவசியமாகும். விலை அணு 8.

## பூலோக இன்பதுன்பம்.

இந்நூல் இவ்வுலகத்தில் இவ்விவ் விஷயங்களில் இன்பமும், இவ்விவ் விஷயங்களில் துன்பமும் உண்டாகும் என்பனவற்றை நன்ரு யாவர்க்கும் மிகச்சுலபமாகப் போதிக்கத் தக்கதோர் அருமையான வசனநூலாகும் இதில் இல்லறந்துறவற முதலிய பொதுத்தருமங்களும், அவற்றிற்கு அங்கமாக, நற்குணமனைவியர் லக்ஷணம், துர்க்குண மனைவியர் லக்ஷணம், சகோதரர் இயல்பு, சம்சார வியல்பு, இருதாரக்கொடுமை, பெற்ருேர் கடமை முதலியனவும் திருஷ்டாந்த கதைகளோடு நன்ருய் விளங்கும்படி கூறப்பட்டிருக்கின்றன. ஆகையால், இதை ஒவ்வொருவரும் வாங்கிப் படிக்கவேண்டியது அத்தியாவசியமாகும். விலை அணு 8.

## ஸ்திரீ புருஷ ஜாதகத் திறவுகோல்.

உலகத்தில் தமதுவாழ்நாளில் தாம் அடைய நிற்கும் சுகதுக்கங்களை அறிந்துகொள்ள வேண்டும் என்னும் அவா சாதாரணமாக எல்லா ஸ்திரீகளுடைய எண்ணத்திலும், எல்லா புருஷர்களுடைய எண்ணத்திலும் குடிகொண்டிருப்பதொருவிஷயமேயாகும். அதன் பொருட்டுச் சோதிடரை வருவித்து அவர்கள் விரும்பிய பொருள்களைக்கொடுத்து வருந்துகின்ற மனிதர்களும் கணக்கி லடங்காதவர்களே யாவர் இந்நூல் இத்தகைய துன்பமொன்று மின்றி ஒவ்வொருவரும் தாம்தாமே தம்முடைய ஜாதகங்களைக் கொண்டு அறிந்துகொள்ளுதற்கு ஒரு பூட்டைத் திறப்பதற்குரிய சாவியைப் போல உபயோகப்படுவதாகும்; ஆகையால் இந்நூல் ஒவ்வொருவர் கையிலும் இருக்கவேண்டியது அத்தியாவசியமாகும். விலை அணு 8.

## "எ. சி. ஏர் ஆயல்."



இந்தத் தைலத்தை உபயோகப்படுத்துவதற்குமுந்தி மாதர் தங்கூந்தலின் அளவெடுத்துக் கொண்டு, பிந்தி சிலநாள்பொறுத்து, அளவிட்டு பார்ப்பாராக. "எ. சி. ஏர் ஆயலை" ஸ்திரீகளேனும் புருஷரேனும் தினந் தப்பாது காலை மாலை சிரசிலிட்டு வாரிக்கொண்டுவந்தால், அது மயிர்க்கால்கடோறும்பிரவேசித்து ஆதாரமாகிய மூளை, கண், காது முதலியவைகளைக் குளிர்ப்பித்து, பேன் புழுக்கள் முதலியவைகளைப் போக்கிவிடும். கூந்தலும் சிகையும் சொற்பகாலத்திற்கெல்லாம் ஆலின் விழுதைப்போல் தழைத்து, கறுத்து, நீண்டு, பட்டுக்குச்சுபோலாகி, சிரசு அலங்காரமடையும். இதன் குணமும் உண்மையும் வாங்கி அனுபவிப்பவருக்கே தெரியவரும்.

புட்டி 1-க்கு அணா 8.

—[o]—

## எ. சி. டூத் பவுடர்.

பல்லில் ஈறுகட்டுதல், சிலுசிலிர்த்தல், கூசுதல், குத்துதல், வீங்குதல், வாய் நாறுதல், இரத்தங் கசிதல், நாவில் மாப்படிதல் முதலிய தோஷங்களை இது வெகு சீக்கிரத்தில் நீக்கி, பற்களை உறுதிப்படுத்தும். இந்தப் பல்பொடியைப் பாலர், விருத்தர் முதலிய யாவரும் உபயோகிக்கலாம்.

புட்டி 1-க்கு அணா 3

# எ. சி தாதுவிருத்தி லேகியம்



இது ஓர் அற்புத லேகியம். வயது சாய்ந்தமையாலோ அதிக வுழைப்பாலோ, இளமைக்குற்றங்களாலோ, இரத்தங்கெட்டு, வீரியம்நீர்த்து, நரம்புகள் தளர்ந்து, உடம்பு இளைத்து, மேனிவெளுத்து, கண்கள் ஒளிமழுங்கி, காது அடைப்புற்று, இடுப்பு உளைந்து, கைகால் தள்ளாடி, மனந்தடுமாறி, காரியங்களில் ஊக்கமற்று வருந்தும் மக்களுக்கு இதைப்போல உற்றதுணை வேறிருக்குமென்று நினைக்க விடமில்லை. இது நரை திரைகளை மாற்றிக் கிழவரையும் குமரராய்ச் செய்ய வல்லதென்றால் இதன் மஹிமை சொல்லில் அடங்கிய தொன்றல்ல. இது சகல வியாதிகளையும் போக்குவதோடு, தேகமுயற்சி மனமுயற்சியும் செய்வோராகிய உத்யோகஸ்தர்களுக்கும் பாடசாலைமாணாக்கர்களுக்கும், புத்திரபாக்கியம் வேண்டுவோர்க்கும் இன்றியமையாதது. காலை மாலையாக கெச்சைக்காய் பிரமாணம் சாப்பிடவேண்டியது. இரவில் ஆவின்பா சாப்பிடவேண்டும். பத்தியம் கிடையாது.

டப்பி 1-க்கு ரூ **1—4—0.**

பி. ஆதிமூலஞ் செட்டியார்,
செந்தமிழ்ப் புத்தகசாலை,
நெ. 26. சௌரிமுத்து தெரு,
மண்ணடி போஸ்ட்,
மதறாஸ்.